முஹுூர்த்தம் பார்க்கவேண்டியதில்லை. எந்த நிமிஷம் வைராக்யம் ஏற்படுகிறதோ, அந்த நிமிஷமே புறப்பட வேண்டும்" என்று திடமான தீர்மானம் செய்து கொண்டு புறப்படுகிறான். அந்த ஸமயம் வீட்டில் குழந்தைகளின் அழுகைக் குரல் காதிலே பட்டதும் அவர்களை ஸமாதானம் செய்யும் பொருட்டு விரைவாகத் திரும்பி வந்துவிடுகிறான். (இவ்வளவு தான் நம் வைராக்கியத்தின் உறுதி.)

**नैव ब्रूमो वयमतिथयोऽभ्यागता बन्धुवर्गा**
**दीनानाथाः सुहृद इति ये तेषु कार्या दयेति**
**यं त्वं पोष्यं मनसि कुरुषे नित्यमात्मानमेकं**
**जन्मन्यस्मिन्निव बिभृहि तं सर्वदेत्युल्लपामः ॥ २३ ॥**

**நைவ ப்$^{3}$ரூமோ வயமதித$^{2}$யோ ப்$^{4}$யாக$^{3}$தா ப$^{3}$ந்து$^{4}$வர்கா$^{3}$**
**தீ$^{3}$னானாதா: ஸுஹ்ருத$^{3}$ இதியே தேஷு கார்யா தயேதி ।**
**யம் த்வம் போஷ்யம் மநஸி குருஷே நித்யமாத்மானமேகம்**
**ஜன்மன்யஸ்மின்னிவ பி$^{3}$ப்$^{4}$ருஹி தம் ஸர்வதே$^{3}$த்யுல்லபாம: ॥ (23)**

**அதித$^{2}$ய:** = அதிதிகள்; **அப்$^{4}$யாக$^{3}$தா:** = நாடிவந்தவர்கள்; **ப$^{3}$ந்து$^{4}$வர்கா$^{3}$:** = பந்துஜனங்கள்; **தீ$^{3}$னானாதா:** = ஏழைகள் திக்கற்றவர்கள்; **ஸுஹ்ருத$^{3}$:** = நண்பர்கள்; **இதியே** = என்று எவர்கள் உண்டோ; **தேஷு** = அவர்களிடத்தில்; **த$^{3}$யா கார்யா இதி** = அனுதாபம் காட்டவேண்டுமென்று; **நைவ ப்$^{3}$ரூம:** = நாம் கூறவேயில்லை; **யமேகம் நித்யம் போஷ்யம்** = யாதொருவனை எப்போதும் போஷிக்கவேண்டியதென்று; **மநஸி த்வம் குருஷே** = மனதில் நீ தீர்மானித்திருக்கிறாயோ; **தமாத்மானம்** = அத்தகைய தன்னை; **அஸ்மின் ஜன்மனி இவ** = இந்த ஜன்மத்தில் போல; **ஸர்வதா$^{3}$** = எந்த ஜன்மத்திலும்; **பி$^{3}$ப்$^{4}$ருஹி** = நீ போஷிப்பாயாக; **இதி உல்லபாம:** = என்று (தான்) சொல்லுகிறோம்.

நீ அதிதி பந்து மித்திரர்கள் ஏழை யெளியவர்கள் இவர்களை உபசரித்துத் தான் ஆகவேண்டுமென்று ஒருவரும் சொல்லவில்லை. உன்னை நீ போஷித்துக் கொள்ள வேண்டுமென்று நன்றாய்த் தெரிந்து கொண்டிருக்கிறாய் அல்லவா? அந்த உன்னையே நீ இந்த ஜன்மத்தில் மட்டுமன்று, வரப்போகிற ஜன்மங்களிலும் போஷித்துக் கொள் என்று தான் கதறுகிறார்கள் தர்ம சாஸ்திர கர்த்தாக்கள்.

**को नु व्यासः क इव स मनुः कोन्वसौ याज्ञवल्क्यो**
**यैरुद्धुष्टं हितमसकृदस्मासु पित्रेव पुत्रे ।**
**पश्यामस्तानिरुपधिकृपासागराल्लोकबन्धून्**
**पश्यामोऽस्मानिरवधितमःक्ष्माधारान्ब्रह्मबन्धून् ॥२४॥**

**கோ நு வ்யாஸ: க இவ ஸ மனு: கோன்வஸௌ யாஜ்ஞவல்க்யோ**
**யைருத்3து4ஷ்டம் ஹிதமஸ க்ருத3ஸ்மாஸு பித்ரவே புத்ரே |**
**பஶ்யாமஸ்தான் நிருபதி4 க்ருபாஸாக3ரான் லோகப3ந்தூ4ன்**
**பஶ்யாSமோஸ்மான் நிரவதி4தம: க்ஷமாத4ரான் ப்3ரஹ்ம ப3ந்தூ4ன் ||**
**(24)**

**யை:** = (எந்த மஹான்களால்) எவர்களால்; **அனக்ருத்** = பன்முறை; **அஸ்மாஸு** = நம் விஷயத்தில்; **பித்ரா புத்ரே இவ** = ஒரு பிதாவினால் புத்ரன் விஷயத்திலே போல; **ஹிதம்** = நன்மையானது; **உத்4ருஷ்டம்** = உரத்த குரலில் போதிக்கப்பட்டதோ; **ஸ: வ்யாஸ: கோனு** = அந்த வியாஸர் என்பவர் யார்?; **ஸ: மனு: க: இவ** = அந்த மனுதான் யாரோ?; **அஸௌ யாஜ்ஞவல்க்ய: கோ நு** = இந்த யாக்ஞவல்கியர் யார்?; **தான்** = அவர்களை; **நிருபதி4க்ருபாஸாக3ரான்** = களங்க மற்ற கருணைக் கடல்களாகவும்; **லோகப3ந்தூ4ன்** = உலகின் உறவினர்களாகவும்; **பஶ்யாம:** = அறிகிறோம்; **அஸ்மான்** = நம்மையோ வென்றால்; **நிரவதி4தம: க்ஷமாத4ரான்** = எல்லையற்ற இருள் மலைகளாகவும்; **ப்3ரஹ்ம ப3ந்தூ4ன்** = பிராம்மண ஜன்மத்தில் இழிந்தவர்களாகவும்; **பஶ்யாம:** = அறிகிறோம்.

வியாஸர், மனு, யாஜ்ஞவல்க்யர் என்ற பெரியோர்கள் யார், நாம் யார்? அவர்கள் ஞானிகள் ஆதலால், கருணை ததும்பும் அந்தரங்கத்துடன், பிதா புத்திரனுக்கு உபதேசிப்பதுபோல் நமக்கு எது இகத்திலும் பரத்திலும் ஹிதமோ அதைப் பல வழிகளில் விளக்கி யிருக்கிறார்கள். ஆனால் நாம் என்ன கூறியும் என்றும் நிகரற்ற அவிவேகிகளாகவும், ஆசாரம் இழந்தவர்களாகவும் இருந்து கொண்டிருப்பது தான் பரிதாபம்.

**यत्तामिस्र नरककुहरे यद्बहिश्चक्रवाला-**
**द्यत्पाताले यदपि धरणौ वार्षिकीषु क्षपासु ।**
**रूढं गाढं तम इति समस्तं च तचिन्त्यमानं**
**नास्माकान्तःकरणतमसो दासभावेऽपि योग्यम् ॥२५॥**

**யத்தாமிஸ்ரே நரககுஹரே யத்3வஹிஶ்சக்ரவாளா -**
**த்3யத்பாதாலே யத3பி த4ரணௌ வார்ஷிகீஷு க்ஷபாஸு |**
**ரூட4ம் கா3ட4ம் தம இதி ஸமஸ்தம ச தச்சிந்த்யமானம்**
**நாஸ்மாகாந்த: கரணதமஸோ தா3ஸபா4வே பியோக்3யம் ||** (25)

**யத்** = எது; **தாமிஸ்ரே** = தாமிஸ்ரம் என்ற; **நரககுஹரே** = நரகக்குழியிலும்; **யத்** = எது; **சக்ரவாளாத் வஹி:** = சக்ரவாள மலைத்தொடருக்கு அப்பாலும்; **யத் பாதாலே** = எது பாதாளத்திலும்; **வார்ஷிகீஷு க்ஷபாஸு** = மழைக்கால இரவுகளில்; **யத் த4ரணை** = எது பூமியிலும்; **கா3ட4ம் தம: இதி** = காரிருள் என்று; **ரூட4ம்** = பிரஸித்தமோ; **சிந்த்யமானே** = யோசித்துப் பார்த்தால்; **ஸமஸ்தம ச தத்** = அது அவ்வளவும்; **ஆஸ்மாகாந்த: கரணதமஸ:** = நம் சித்தத்திலிருக்கும் இருளுக்கு;

**தா3ஸபா4வேऽபி** = அடிமைத்தனம் அடைவதற்குக் கூட; **ந யோக்3யம்** = யோக்யதையுள்ளதன்று.

நம் ஹ்ருதயத்தில் குடிகொண்டிருக்கும் காரிருளுக்கு உவமையே சொல்லமுடியாது; இருள் மயமான நரகக் குழியில் கிடப்பதும், லோகாலோக பர்வதத்திற்குப் புறம்பே சூழ்ந்து நிற்பதும், பாதாள லோகத்திலுள்ளதும், கார் காலத்து நள்ளிரவுகளில் திரண்டு வருவதுமான இருள்கள் நம் அஞ்ஞான அந்தகாரத்திற்குக் கூலிவேலை செய்யக்கூட அர்ஹதை யில்லாதவை.

**(குறிப்பு)** லோகா லோக பர்வதம் - சக்ரவாள பர்வதமென்பது இப் பூமண்டலத்தைச் சுற்றி நிற்கும் சுவர் போன்றது. அதற்கு வெளியில் சூரிய கிரணங்கள் எட்டுவதில்லை.

**सर्वानर्थप्रथमकरणे सर्वभावैर्जिहास्ये**
**देहे मोहो यदि परिणतः पोषणीयो मयेति ।**
**आस्तामेवं वपुरिदमिवागामि चासाकमेवे-**
**त्येषाऽप्यास्तां मतिरिति परं धर्मशास्त्रेषु घोपः॥२६॥**

**ஸர்வானர்த2ப்ரத2மகரணே ஸர்வபா4வைர்ஜிஹாஸ்யே**
**தே3ஹே மோஹோ யதி3 பரிணத3: போஷணீயோ மயேதி |**
**ஆஸ்தாமேவம் வபுரித3மிவாகா3மி சாஸ்மாகமேவே**
**த்யேஷா ப்யாஸ்தாம் மதிரிதி பரம் த4ர்மஶாஸ்த்ரேஷு கோ4ஷ: ||**
**(26)**

**ஸர்வானர்த2ப்ரத2மகரணே** = எல்லாவித அனர்த்தங்களுக்கும் முதல் ஸாதனமானதும்; **ஸர்வபா4வைர்: ஜிஹாஸ்யே** = எப்படி யோஜித்துப் பார்த்தாலும் தள்ளத் தகுந்ததுமான; **தே3ஹே** = சரீரத்தில்; **மயா போஷணீய:** = (இது) என்னால் போஷிக்கப்பட வேண்டியது; **இதி மோஹா:** = என்ற அறிவீனம்; **யதி3 பரிணத3**: = முற்றியிருந்தால்; **ஏவம்** = இம்மாதிரி; **ஆஸ்தாம்** = இருக்கட்டும்; **இதம் வபுரிவ** = இந்த சரீரம் போலவே; **ஆகா3மி ச** = வரப்போகிற சரீரமும்; **ஆஸ்மாகமேவ** = நம்முடையது தான்; **இதி** = என்ற; **ஏஷாऽபி மதி:** = இந்த எண்ணமும்; **ஆஸ்தாம்** = (நமக்கு) இருக்கட்டும்; **இதி பரம்** = என்பது தான்; **த4ர்மஶாஸ்த்ரேஷு** = தரும சாஸ்திரங்களில்; **கோ4ஷ:** = பறையறிவிக்கப் படுகிறது.

வெறுக்கத் தக்கதான இந்த சரிரம் அவசியம் போஷிக்கத் தகுந்ததென்ற அறியாமை உனக்கு இருக்குமானால், இந்த சரீரம் நம்முடையது ஆனதுபோல, வரப்போகிற சரீரங்களும் நம்முடையது தான்; அவைகளையும் போஷிப்பது அவசியம். அவைகள் நலம்பெற நாம் இப்போதே தர்மங்களைச் செய்யவேண்டும் என்ற ஞாபகம் இருக்கட்டும்" என்று தான் தரும சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

**कामी कामव्रणपरिगतः कामिनीरेव हित्वा**
**भुङ्क्ते पश्चादपगतभयं कामिनीनां सहस्रम् ।**
**इत्थंकारं विषयसुखभोगैकतानैनरैर-**
**प्यस्मिन्देहे कतिपयदिनान्येष भोगो विवर्यः॥२७॥**

**காமீ காமவ்ரணபரிக3த: காமினீரேவ ஹித்வா**
**பூ4ங்க்தே பஶ்சாத3பக3தப4யம் காமினீனாம் ஸஹஸ்ரம் ।**
**இத்த2ம்காரம் விஷயஸுக2போ4கைகதானைர் நரைர -**
**ப்யஸ்மின் தே3ஹே கதிபயதினான்யேஷ போ4கோ3 விவர்ஜ்ய: ॥ (27)**

**காமவ்ரணபரிக3த:** = ஸ்திரீமூலமான ரோகங்களால் பீடிக்கப்பட்ட; **காமி** = துன்மார்க்கன்; **காமினீ: ஏவ** = ஸ்திரீகளையே; **ஹித்வா** = (சிலகாலம்) விட்டுவிட்டு; **பஶ்சதம்** = பின்பு; **காமினீனாம் ஸஹஸ்ரம்** = வேண்டிய மட்டும் ஸ்திரீகளை; **அபக3தப4யம்** = பயம் நீங்கியவனாக; **பூ4ங்க்தே** = அனுபவிக்கிறான்; **இத்த2ம்காரம்** = இவ்விதம்; **போ4கைகதானைரபி நரை:** = சிற்றின்பமே முக்கியமென்றுகொண்ட மனிதர்களாலே கூட; **அஸ்மினம் தே3ஹே** = இந்த சரீரத்தில்; **கதிபயதினானி** = சில நாட்கள் வரையில்; **யேஷ போ4கா3:** = இந்த இன்பத்தை யனுபவிப்பது; **விவர்ஜ்ய:** = ஒதுக்கத் தக்கதாகிறது.

காமரோகத்தால் வருந்துகிற ஒரு காமி சிகித்ஸையின் பொருட்டு சிலகாலம் ஸ்த்ரீகளை விலக்கியிருந்து பிறகு பயமின்றி அநேகம் ஸ்த்ரீகளை அனுபவிப்பதுபோல, இவ்வுலகில் சரீர ஸுகத்தைச் சிறிது காலம் விட்டு சாஸ்திரங்களிற் கூறிய நற்காரியங்களைச் செய்துவந்தால் பின்பு ஸ்வர்க்கம் முதலிய வேறு உலகத்தில் பயமின்றி அநேக ஸுகங்களை யடையலாம் என்பது கருத்து.

**न्याय्यादर्थादपि किमधिकं लभ्यमुन्मार्गवृत्त्या**
**वैधादनादपि किमधिकं पर्युदस्तेषु भोज्यम् ।**
**भार्याभोगादपि भवति कः पण्यकान्तासु भोगः**
**प्रायो नेति श्रुतिविषयता विश्वमाधुर्यहेतुः ॥ २८ ॥**

**ந்யாய்யா த3ர்தா2த3பி கிமதி4கம் லப்4யமுன்மார்க3வ்ருத்யா**
**வைதா4த3ன்னாத3பி கிமதி4கம் பர்யுத3ஸ்தேஷு போ4ஜ்யம் ।**
**பா4ர்யா போ4கா3த3பி ப4வதிக: பண்யகாந்தாஸு போ4க3:**
**ப்ராயோ நேதி ஶ்ருதிவிஷயதா விஶ்வமாது4ர்ய ஹேது4: ॥ (28)**

**ந்யாய்யா த3ர்தாத3பி** = நியாயமான வழியில் சம்பாதிக்கப்படும் பணத்தைக் காட்டிலும்; **உன்மார்க3வ்ருத்யா** = அக்ரம வழியில்; **அதி4கம்** = அதிகம்; **கிம்லப்4யம்** = அடையக்கூடியதா என்ன?; **வைதா4த3ன்னாத3பி** = பரிசுத்தமான அன்னத்தைக் காட்டிலும்; **பர்யுத3ஸ்தேஷு** = தள்ளுபடியான அன்னங்களில்; **அதி3கம்** = அதிகம்;

**கிம் போ4ஜ்யம்** = சாப்பிடக்கூடியதா என்ன?; **பா4ர்யாபோகா3த்3பி** = தன் பத்தினியை யனுபவிப்பதைக் காட்டிலும்; **பண்யகாந்தாஸு** = விலைமாதர்களிடம்; **க: போ4க3:** = எவ்விதமான (மேலான) ஸுகம்; **ப4வதி** = ஏற்படுகிறது?; **நேதி** = வேண்டாமென்று; **ஶ்ருதிவிஷயதா** = வேதங்களில் கூறப்பட்டிருப்பதே; **ப்ரய:** = அநேகமாய்; **விஶ்வமாது4ர்ய ஹேது4:** = ஜனங்களுக்கு ருசியை யுண்டுபண்ணக்கூடியதா யிருக்கிறது.

(ஆழ்ந்து யோசிக்குங்கால்) ருஜுவான வழியில் ஸமபாதிப்பதைவிட அதிகம் அநியாய வழியில் சம்பாதிக்க முடியாது. விதிப்படி தயார்செய்து புசிக்கப்படும் அன்னத்தைக்காட்டிலும் கண்ட இடங்களில் கண்டவர்கள் தயார் செய்த அசுத்தமான பக்ஷயபோஜ்யங்களை அதிகமாகப் புசித்துவிட முடியுமா? தன் பாரியையின் ஸம்போகத்தை விட வேசியர் ஸங்கமம் எவ்விதத்தில் சிலாக்கியமானது? ஜனங்களுக்குக் குற்றமுள்ள விஷயங்களில் ருசியேற்படுவதற்கு வேதங்கள் அவைகளை நிஷேதிப்பதே காரணம் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. ஏனெனில் வேண்டாமென்று தடுத்தால் அதில் ஜனங்களுக்குச் சபலம் உண்டாவது ஸஹஜம்.

**आस्तिक्यं चेद्धनमखिलमप्यर्थिसात्कर्तुमर्हं**
**नास्तिक्यं चेत्तदपि सुतरां भोगहेतोरपास्यम् ।**
**अस्पृष्वाऽपि स्वयमतिरहः स्थाप्यते यत्तदन्त-**
**स्तस्मिन् हेतुः क इति निभृतं तर्कयामो न विद्मः ॥२९॥**

**ஆஸ்திக்யம் சேத்3த4னமகி2லமப்யர்தி2ஸாத்கர்(த்)துமர்ஹம்**
**நாஸ்திக்யம் சேத்தத3பி ஸுதராம் போ4கஹேதோரபாஸ்யம் ।**
**அஸ்ப்ருஷ்ட்வாபி ஸ்வயமதிரஹ: ஸ்தா2ப்3யதே யத்தத3ந்தஸ்**
**தஸ்மின் ஹேது: க இதி நிப்4ருதம் தர்(க்)கயாமோ ந விஹ்ம: ॥ (29)**

**ஆஸ்திக்யம் சேத்** = நம்பிக்கையிருந்தால்; **அகிலமபி த4னம்** = எல்லா திரவியமும்; **அதி2ஸாத்கர்தும் அர்ஹம்** = வேண்டுபவர்களுக்கு அர்ப்பணம் செய்துவிடத் தக்கது; **நாஸ்திக்யம் சேத்த3பி** = நம்பிக்கையில்லாவிடிலோ; **தத்** = அந்த திரவியம்; **ஸுதராம்** = மிகவும்; **போ4கஹேதோ:** = (தான்) அனுபவிப்பதின் பொருட்டு; **அபாஸ்யம்** = செலவிடத்தகுந்தது; **க2யம் அபி** = தானும்; **அஸ்ப்ருஷ்டா** = தொடாமல்; **தத்** = அது; **அத்த:** = உள்ளே; **அதிரஹ:** = வெகு மறைவாக; **யத் ஸ்தா2ப்3யதே** = வைக்கப்படுகிறதே; **தஸ்மின்** = அதற்கு; **ஹேது: க: இதி** = என்ன காரணம் என்று; **நிப்4ருதம் சிந்தயாம:** = தனித்து யோசனை செய்து பார்க்கிறோம்; **ந விஹ்ம:** = (ஆனால்) (நாம் அதை) அறியவில்லை.

ச்ருதி ஸ்ம்ருதி புராணங்களில் சொல்லப்பட்ட தருமங்களை நம்பினால் பரலோகத்தில் க்ஷேமமடைவதன் பொருட்டு ஸம்பாதித்த திரவியத்தை ஸத்பாத்திரத்தில் தானம் செய்து விடவேண்டும். அப்படி நம்பிக்கையில்லாவிடில், தான் அனுபவிக்கும் பொருட்டு அந்த திரவியத்தைச் செலவு செய்து விடவேண்டும்.

சில லோபிகள் இரண்டுமில்லாமல் அதை மறைத்து வைப்பதன் காரணம் புலப்பட வில்லை.

**श्वानः पुच्छाञ्चलकुटिलतां सूकराः कुक्षिपोषं**
**कीशा दन्तप्रकटनविधिं गर्दभा रूक्षघोषम् ।**
**मा वक्षःश्वयथुमपि च स्त्रीषु दृष्ट्वा रमन्ते**
**तत्सौन्दर्यं किमिति फलितं तत्तदज्ञानतोऽन्यत् ॥ ३०॥**

**ஶ்வான: புச்சா2ஞ்சல குடிலதாம் ஸூகரா: குக்ஷிபோஷம்**
**கீஶா த3ந்தப்ரகடனவிதி4ம் க3ர்த3பா4ரூக்ஷகோ4ஷம் |**
**மர்த்யா வக்ஷ:ஶ்வயது2மபி ச ஸ்த்ரீஷு த்3ருஷ்ட்வா ரமந்தே**
**தத்ஸௌந்த3ர்யம் கிமிதி ப2லிதம் தத்தத3ஜ்ஞானதோன்யத் || (30)**

**ஶ்வான்** = நாய்கள்; **புச்சா2ஞ்சல குடிலதாம்** = வால் நுனியின் கோணலையும்; **ஸூகரா:** = பன்றிகள்; **குக்ஷிபோஷம்** = வயிற்றின் உப்பு தலையும்; **கிஶா**: = குரங்குகள்; **த3ந்தப்ரகடனவிதி4ம்** = பல் இளிப்பதையும்; **க3ர்தா3பா4:** = கழுதைகள்; **ருக்ஷகோ4ஷம்** = வரட்டுச் சத்தத்தையும்; **மர்த்யா:** = மனிதர்கள்; **வக்ஷ:ஶ்வயது2மபி** = மார்வீக்கத்தையும்; **ஸ்த்ரீஷு** = ஸ்திரீ ஜாதியினிடத்தில்; **த்3ருஷ்டா** = பார்த்து; **ரமந்தே** = காமவெறியடைகின்றனர்; **தத்தத3ஜ்ஞானதோன்யதம்** = அந்தந்தப் பிராணிகளின் அறிவீனத்தைத் தவிர; **தத்ஸௌந்த3ர்யம்** = அந்தந்த ஸ்திரீ ஜாதியின் அழகு; **கிமிதி** = எவ்விதத்தில்; **ப2லிதம்** = ஏற்பட்டது.

பிராணிகள் தன் தன் இனத்திற்குத் தக்கபடி சிற்சில அம்சங்களை ஸ்திரீ ஜாதியினிடத்தில் கண்டு காமத்தை யடைகின்றன. விசாரிக்குங்கால், அந்தந்த அம்சங்களால் அந்தந்த ஸ்திரீ ஜாதியின் அழகு புமானை மோஹிக்கும்படி செய்யத் தக்கதாக எற்பட்டுவிட்டதாய் சொல்ல இடமில்லை. ஆனாலும், இந்த மோஹம் ஏற்படுவது வாஸ்தவம். இஃது அந்தந்தப் பிராணிகளின் அறிவினத்தைத் தவிர வேறு யாதொன்றுமில்லை என்று விவேகிகள் அறிவார்கள்.

**रन्तुं प्राप्तो दशति दशनैराननं चेत्प्रियाया**
**भोक्तुं प्राप्तः किमिति न दशेदग्रहस्तं प्रदातुः ।**
**इत्थं व्यक्त हृदयजनुपः पामरोन्मादकत्वे**
**हातुं सद्यः प्रभवति न कोऽप्यन्ततो लज्जितुं वा ॥३१॥**

**ரந்தும் ப்ராப்தோ த3ஶதி த3ஶனைரானனம் சேத் ப்ரியாயா**
**போ4க்தும் ப்ராப்த: கிமிதி ந தஶேத3க்3ரஹஸ்தம் ப்ரதா3து: |**
**இஸ்த2ம் வ்யக்தே ஹ்ருதய ஜனுஷ: பாமரோன்மாத3 கத்வே**
**ஹாதும் ஸத்4ய: ப்ரப4வதி ந கோऽப்யந்ததோ லஜ்ஜிதும் வா || (31)**

**ரந்தும் ப்ராப்த:** = கிரீடிக்க வந்தவன்; **ப்ரியாயா:** = காதலியின்; **ஆனனம்** = முகத்தை; **த³ஶனை:** = பற்களால்; **தஶதி சேத்** = கடிப்பதென்றிருந்தால்; **போ⁴க்தும் ப்ராப்த:** = சாப்பிட வந்தவன்; **ப்ரதா³து: அக்³ரஹஸ்தம்** = பரிமாறுபவனுடைய கைவிரலை; **கிமிதி ந தஶேத்** = ஏன் கடிக்கக் கூடாது?; **இஸ்த²ம்** = இவ்விதம் (பார்க்குங்கால்); **ஹ்ருதய ஜஞ்ஷ: பாமரோன்மாத³ கத்வே** = மன்மதன் அறிவில்லாதவர்களை மயக்குகிறவன் (என்பது); **வ்யக்தே** = நன்கு விளங்கினாலும்; **கோபி** = ஒருவனும்; **ஸத்⁴ய:** = உடனே; **ஹாதும்** = விட்டுவிட; **ந ப்ரப⁴வதி** = சக்தியுள்ளவனாவதில்லை; **அந்தத:** = கடைசி பக்ஷத்தில்; **லஜ்ஜிதும் வா (ந ப்ரப⁴வதி)** = வெட்கப்படக் கூடியவனாகவுமில்லை.

ஸ்திரீ ஸம்போகத்திற்கும் உதட்டைக் கடிப்பதற்கும் என்ன ஸம்பந்தம்? அப்படியானால் சாப்பிட வந்தவன் அன்னம் வழங்குபவரின் கையைக் கடிக்கலாமே. யோசித்துப்பார்த்தால் மன்மதக் குழப்பம் மதியீனமே. ஆனால், அதைத் தவிர்க்க யாரால் ஸாத்தியமாகின்றது? யார்தாம் அதனால் லஜ்ஜையை மட்டுமாவது அடைகிறார்கள்?

**दाराः पुत्राः शयनमशनं भूषणाच्छादने वा**
**यच्चेदृक्षं पुमभिलषितं तेषु माशब्दिकः कः।**
**किं त्वेतेषां भवति नियमः सेवने कोऽपि कोऽपि**
**द्वेपस्तस्मिन्नपि यदि भवेत्तत्र वक्ता कृतान्तः॥३२॥**

**தா³ரா: புத்ரா: ஶயனமஶனம் பூ⁴ஷணாச்சாத³னே வா**
**யச்சேத்³ருக்ஷம் புமபி⁴லஷிதம் தேஷு மாஶப்³தி³க: க: |**
**கிம் த்வே தேஷாம ப⁴வதி நியம: ஸேவனே கோऽபி கோऽபி**
**த்⁴வேஷஸ் தஸ்மின்னபி யதி³ ப⁴வேத் வக்த்தா க்ருதாந்த: ||** **(32)**

**தா³ரா:** = மனைவி; **புதர:** = பிள்ளை; **ஶயனம்** = படுக்கை; **அஶனம்** = சாப்பாடு; **பூ⁴ஷணாச்சாத³னே வா** = ஆபரணம் ஆடை; **ஈட்ருக்ஷம்** = இதுபோன்ற; **புமபி⁴லஷிதம் யச்ச** = மானிடர்கள் வேண்டுவது எது எதுவோ; **தேஷு** = அவைகளில்; **க: மாஶப்³தி³க:** = வேண்டாமென்று யார் தடுத்தார்கள்?; **கிம்து** = ஆனால்; **ஏதேஷாம் ஸேவனே** = இவைகளை அனுபவிப்பதில்; **கோऽபி கோऽபி** = ஒவ்வொரு; **நியம:** = அளவு; **ப⁴வதி** = ஏற்பட்டிருக்கிறது; **தஸ்மின் அபி** = அதில்கூட; **யதி³ த்⁴வேஷ: ப⁴வேத் =** வெறுப்பு உண்டானால்; **தத்ர** = அவ்விஷயத்தில்; **க்ருதாந்த:** = யமன்; **வக்த்தா** = பதில் சொல்வான்.

மனிதன் இச்சைப்படும் எந்த ஸௌக்கியத்தையும் சாஸ்திரங்கள் நிஷேதிக்க வில்லை. ஆனால் அவைகளை யடைவதிலும் அனுபவிப்பதிலும் சில விதிகளை, நம் க்ஷேமத்தை யுத்தேசித்தே, அவைகள் ஏற்படுத்தியிருக்கின்றன. அவ்விதிகளை இடையூறுகளாய் எண்ணி உல்லங்கனம் செய்வாயானால், உனக்கு யமன் முன்னி லையில் தண்டனை ஏற்படுமென்பது திண்ணம்.

वेदाभ्यासव्यसनरसिकैः स्थीयते तावता किं
सूक्ष्मा बुद्धिः श्रुतमिव विशत्यश्रत तावता किम् ।
जल्पारम्भे जयति नियतं वादिनस्तावता किं
निर्वेदात न यदि हृदयं शान्तिमभ्येति पुंसः ॥ ३३ ॥

**வேதா[3]ப்[4]யாஸவ்யஸன ரஸிகை: ஸ்தீ[2]யதே தாவதா கிம்**
**ஸூக்ஷ்மா பு[3]த்[4]தி[3]: ஶ்ருதமிவ விஶத்யஶ்ருதம் தாவதா கிம் ।**
**ஜல்பாரம்பே[4] ஜயதி நியதம் வாதி[3]னஸ்தாவதா கிம்**
**நிர்வேதா[3]ர்தம் ந யதி[3] ஹ்ருத[3]யம் ஶாந்தி மப்[4]யேதி பும்ஸ: ||** (33)

**வேதா[3]ப்[4]யாஸவ்யஸன ரஸிகை: ஸ்தீ[2]யதே** = வேதங்களைப் படிப்பதில் ஊக்கமுள்ளவர்களாக இருந்து; **தாவதா கிம்** = என்ன பிரயோஜனம்?; **ஸூக்ஷ்மா பு[3]த்[4]தி[3]**: = கூர்மையான புத்தி; **ஶ்ருதமிவ** = கேட்டதைப் போல; **அஶ்ருதம் விஶதி** = கேட்காததையும் அறிகிறதென்றாலும்; **தாவதா கிம்** = என்ன கிடைத்துவிட்டது; **ஜல்பாரம்பே[4]** = பேச ஆரம்பிக்கும்போதே; **நியதம்** = நிச்சயமாய்; **வாதி[3]ன:** = எதிர் வாதம் செய்கிறவர்களை; **ஜயதி** = ஜயித்துவிடுகிறான் என்றாலும்; **தாவதா கிம்** = என்ன ஸாதித்துவிட்டான்?; **நிர்வேதா[3]ர்தம் பும்ஸ: ஹ்ருத[3]யம்** = வைராக்கியத்தினால் மனுஷ்யனுடைய மனம் ஒழிவடைந்து; **ஶாந்திம்** = அமைதியான நிலையை; **ந அப்[4]யேதி யதி[3]** = அடையவில்லையென்றால் (மற்றவைகளினால் என்ன பலன்?)

வேதம் ஓதியும் சாஸ்திர வல்லமை இருந்தும் பேச்சுத் திறமை இருந்தும் முடிவில் ஒன்றும் பயனில்லை. மனுஷ்யனுக்கு முக்கியமானது வைராக்கியத்தினால் மனம் அடங்க வேண்டியது. இதன்றி மற்ற புகழெல்லாம் வீணே.

यस्त्वत्यन्तव्यवसितमतिः संजिघृक्षेत धर्म
खटाङ्गादेवि न किमलं तस्य यामार्धमायुः ।
दुष्पाण्डित्यादपहृतमतिर्यः पुनः संशयात्मा
कस्मै तस्य प्रभवतु वृथा काकवदीर्घमायुः॥३४॥

**யஸ்த்வத்யந்தவ்ய வஸிதமதி: ஸம்ஜித்[4]ருக்ஷேத த[4]ர்மம்**
**கட்வாங்கா[3]தே[3]ரிவ ந கிமலம் தஸ்ய யாமார்த[4]மாயு: ।**
**து[3]ஷ்பாண்டி[4]த்யா த[3]பஹ்ருத மதிர்ய: புன: ஸம்ஶயாத்மா**
**கஸ்மை தஸ்ய ப்ரப[4]வது வ்[3]ருதா[2] காகவத்[3]தீ[3]ர்க[4]மாயு: ||** (34)

**ய: து** = எவனொருவன்; **அத்யந்தவ்ய வஸிதமதி**: = திடமான புத்தி தீர்மானத்துடன்; **த[4]ர்மம்** = தருமத்தை; **ஸம்ஜித்[4]ருக்ஷேத** = ஸம்பாதிக்க ஆவலுடையவனோ; **தஸ்ய** = அவனுக்கு; **கட்வாங்கா[3]தே[3]ரிவ** = கட்வாங்கர்

முதலியவர்களுக்குப்போல; **யாமார்த**[4] = பாதியாமம்; **ஆயு:** = ஆயுள்; **கிம் ந அலம் =** போகாதா?; **ய: புன:** = எவனொருவன்; **து**[3]**ஷ்பாண்டி**[4]**த்யாத்** = வித்தை கற்றவன் என்ற அகம்பாவத்துடன்; **அபஹ்ருதமதி:** = புத்தி கெட்டு; **ஸம்ஶயாத்மா** = பலவிதங்களில் தடுமாறுகிறானோ; **தஸ்ய** = அவனுக்கு; **காகவத்** = காக்கைக்கு இருப்பது போல; **வ்**[3]**ருதா**[2] = வியர்த்தமான; **தீ**[3]**ர்க**[4]**ம் ஆயு:** = நீண்ட ஆயுள் (இருந்தும்); **கஸ்மை ப்ரப**[4]**வது** = எதற்கு ஆகப்போகிறது?

சாஸ்திரம் படித்து கோணக்ககூஷிகளில் புத்தியைத் தீட்டி ஊர்ஜிதமான தருமப் பிரவிருத்தியில்லாமல் ஸந்தேஹங்கள் பல வளர்த்துவரும் பண்டிதர்களுக்கு காக்கைக்கு இருப்பதுபோல் எண்ணிறந்த வாழ்நாள்கள் இருப்பினும் ஒன்றுக்கும் உதவாது. நிச்சய புத்தியுடையவன் கட்வாங்கரைப் போல ஸ்வல்ப காலத்திலேயே சிரேயஸ்ஸை அடையக்கூடும்.

**குறிப்பு:-** கட்வாங்கர் என்ற ராஜர்ஷி தேவர்களிடமிருந்து தம் ஆயுள் ஒருமுஹூர்த்த காலம் தான் பாக்கியிருக்கிறதென்று தெரிந்து கொண்டு, அதற்குள்ளேயே வைராக்யத்தை வஹித்து, ஹரியைச் சரணமாக அடைந்து முக்தியைப் பெற்றார் (பாகவதம் 2 ஸ்கந்தம் முதல் அத்தியாயம்).

**अर्था न स्युर्यदि विजहिमो धर्ममर्थैकसाध्यं**
**कायक्लेशैः कतिकतिविधः साधनीयो न धर्मः ।**
**कायः श्रान्तो यदि भवति कस्तावता धर्मलोप-**
**श्चित्तं दत्त्वा सकृदपि शिवे चिन्तितं साधयामः॥३५॥**

**அர்தா**[2] **ந ஸ்யுர்யதி**[3] **விஜஹிமோ த**[4]**ர்மமர்தை**[2]**ர்கஸாத்**[4]**யம்**
**காயக்லேஶை: கதிகதிவித**[4]**: ஸாத**[3]**னீயோ ந த**[4]**ர்ம: |**
**காய: ஶ்ராந்தோ யதி**[3] **ப**[4]**வதி கஸ்தாவதா த**[4]**ர்மலோப**
**சித்தம் த**[3]**த்வா ஸக்ருத**[3]**பி ஶிவே சிந்திதம் ஸாத**[4]**யாம: ||** **(35)**

**அர்தா**[2]**: யதி3 நஸ்யு:** = பணம் இல்லையென்றால்; **அர்த்தைகஸாத்**[4]**யம்** = பணத்தினாலேயே ஆகக்கூடிய; **த**[4]**ர்மம்** = தருமத்தை; **விஜஹிம:** = விட்டுவிடுவோம்; **கதிகதிவித**[4]: = எத்தனை விதமான; **த**[4]**ர்ம:** = தருமம்; **காயக்லேஶை: ந ஸாத்**[4]: = சரீரப் பிரயாசையினால் ஆகக்கூடியதாக இல்லை?; யதி **காய: ஶ்ராந்த: ப**[4]**வதி** = சரீரம் களைப்படைந்து விடுமேயானால்; **தாவதா** = அதனால் மட்டும்; **க: த**[4]**ர்மலோப:** = தர்மம் அற்றுப் போய்விடுமா?; **ஸக்ருத**[3]**பி** = ஒருதடவையாவது; **ஶிவே** = ஈச்வரனிடத்தில்; **சித்தம்** = மனதை; **த**[3]**த்வா** = அர்ப்பணம் செய்து விட்டு; **சிந்திதம்** = அபீஷ்டத்தை; **ஸாத**[4]**யாம:** = அடையலாம்.

தரும காரியங்களைச் செய்யப் பணம் அவசியமில்லை. தருமம் பணத்தினால் மட்டுமன்று, சரீரப் பிரயாஸையினாலும் ஸம்பாதிக்கத் தக்கது. சரீரத்தைச் சிரமப்படுத்த முடியாதென்றால், மனதை ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்து

விடலாமல்லவா? ஒரு கணமாவது பரமேச்வரனைச் சரணமடைந்தால், அவர் நம் ஸர்வ அபீஷ்டங்களையும் பூர்த்தி செய்வார்.

**குறிப்பு:-** உலகத்தில் சாக்குப் போக்குகள் சொல்லிக்கொண்டு சுயேச்சையாய் ஜனங்கள் இருக்க விரும்புகிறார்கள். நிச்சய புத்தியேற்பட்டுவிட்டால் நற்கதியடையலாம்.

**स्वेनैवोक्तं निगमवचसा बोधनीयास्तु जीवा**
**जीवैरेवेत्यपि च मुनिभिः कारित धर्मशास्त्रम् ।**
**उत्पश्यन्तु स्वयमिति भवो दारुणश्चान्यतेऽसा-**
**वद्यापि सो यदि खलु जडाः किं विधत्तां शिवोऽपि ॥३६॥**

**ஸ்வேனைவோக்தம் நிக$^{3}$மவசஸா போ$^{4}$த$^{3}$னீயாஸ்து ஜீவா**
**ஜீவைரேவேத்யபி ச முனிபி$^{4}$: காரிதம் த$^{4}$ர்மஶாஸ்த்ரம் |**
**உத்பஶ்யந்து ஸ்வயமிதி ப$^{4}$வோ தா$^{3}$ருணஶ்சால்யதேऽஸா**
**வத்$^{3}$யாபி ஸ்மோ யதி$^{3}$ கலு ஜடா$^{4}$: கிம் வித$^{4}$த்தாம் ஶிவோऽபி ||** (36)

**நிக$^{3}$மவசஸா** = வேதவாக்கியங்களால்; **ஸ்வேனைவ உக்தம்** = தானாகவே வெளிப்படுத்தியிருப்பதை; **ஜீவா:** = மானிடர்கள்; **ஜீவைரேவ து** = மானிடர்களாலேயே; **வைத$^{4}$னீயா:** = உபதேசிக்கத்தகுந்தவர்கள்; **இத்யபி ச** = என்றும் (எண்ணி); **முனிபி$^{4}$:** = ரிஷிகளைக் கொண்டு; **த$^{4}$ர்மஶாஸ்த்ரம்** = தர்மசாஸ்திரம்; **காரிதம்** = செய்விக்கப்பட்டது; **ஸ்வயம்** = தனக்குத்தானே; **உத்பஶ்யந்து** = தெரிந்து கொள்ளட்டும்; **இதி** = என்று; **அஸௌ** = இந்த; **தா$^{3}$ருண: ப$^{4}$வ:** = பயங்கரமான உலகவாழ்க்கை; **சால்யதே** = நடத்திவைக்கப்படுகிறது; **அத்$^{3}$யாபி கலு** = இப்பொழுது கூட; **யதி$^{3}$ ஜடா$^{4}$: ஸ்ம:** = நாம் மூடர்களா யிருப்போமானால்; **ஶிவோபி** = ஈச்வரன் தான்; **கிம் வித$^{4}$த்தாம்** = என்ன செய்யக்கூடும்?

ஈச்வரன் வேதங்களை யுபதேசித்தார். பின்பு வேதங்களின் அர்த்தத்தை மனுஷ்யர்களைக் கொண்டே மனுஷ்யர்களுக்குச் சொல்லவேண்டுமென்று மஹர்ஷிகளைக் கொண்டு லோகத்தில் விளங்கச் செய்தார். மனுஷ்ய வாழ்க்கையில் ஸாரமில்லையென்று காண்பிக்கவே அவர் இந்த கோரமான ஜனன மரணக் கிலேசங்களை நம்முன் பரப்புகிறார். இன்னும் நமக்கு விவேகம் உண்டாகவில்லை. . சிற்றின்பத்திலேயே உழலுகிறோம் என்றால் அவர் தான் என்ன செய்வார் ?

**येनाचान्ताः सलिलनिधयो येन सृष्टा प्रतिद्यौः**
**शस्त्राण्यस्त्राण्यपि कवलितान्येकया यस्य यष्टया ।**
**कस्तादृक्षः प्रभवतु जनो देवभूदेववर्ग**
**कालः कीटानिय कबलयामास तानप्ययनम् ॥ ३७॥**

**யேனாசாந்தா: ஸலில நித4யோ யேன ஸ்ருஷ்டா ப்ரதித்4யௌ:**
**ஶஸ்த்ராண்யஸ்த்ராண்யபி கப3லிதான்யேகயா யஸ்ய யஷ்ட்யா ।**
**கஸ்தாட்ரு : ப்ரப4வது ஜனோ தேவ பூ4தேவ வர்கே3**
**கால:கீடானிவ கப3லயாமாஸ தானப்யயத்னம் ॥** (37)

**யேன** = எவரால்; **ஸலில நித4ய:** = ஸமுத்திரங்கள்; **ஆசாந்தா:** = ஆசமனம் செய்யப்பட்டனவோ; **யேன** = எவரால்; **ப்ரதித்4யௌ:** = வேறு சுவர்க்கம்; **ஸ்ருஷ்டா** = ஸ்ருஷ்டிக்கப்பட்டதோ; **யஸ்ய** = எவருடைய; **ஏகயா யஷ்ட்யா** = ஒரு தண்டத்தினால்; **ஶஸ்த்ராணி அஸ்த்ராணி அபி** = ஆயுதங்களும் அஸ்திரங்களும்; **கப3லிதானி** = விழுங்கப்பட்டனவோ; **தேவ பூ4தேவ வர்கே3** = தேவர்களின் இடையிலும் பிராம்மணர்களின் இடையிலும்; **தாட்ருக்ஷ: ஜன:** = அப்படிப்பட்டவன்; **க: ப்ரப4வது** = எவன் இருப்பான்?; **தானபி** = அவர்களைக்கூட; **கால:** = காலம்; **கீடான் இவ** = புழுக்களைப்போல; **அயத்னம்** = லகுவாக; **கப3லயாமாஸ** = விழுங்கி

ஸமுத்திரத்தைப் பானம் செய்த அகஸ்தியரும் புதிய ஸ்வர்க்கலோகத்தை சிருஷ்டித்த விசுவாமித்திரரும் விசுவாமித்திரரின் அஸ்திர சஸ்திரங்களைத் தன் பிரம்மதண்டத்தினால் வியர்த்தமாகச் செய்த வசிஷ்டரும், காலத்திற்கு இரை யானார்கள். அவர்களுக்குச் சமானமானவர்கள் தேவலோகத்திலும் பூலோகத்திலும் ஒருநாளும் கிடையாது. அவர்களின் கதியே அவ்விதம் என்றால், நாம் சாச்வதம் என்று நினைத்துக்கொண்டிருப்பது பேதைமை அல்லவா? ஆகையால் இந்த தேகமுள்ளபோதே நம் நன்மைக்கு முயலவேண்டும்.

**कायस्थैर्यं करणपटुतां बन्धुसंपत्तिमर्थं**
**चातुर्यं वा किमिव हि बलं बिभ्रतो निर्भराः स्मः।**
**अन्त्यः श्वासः किमयमथवोपान्त्य इत्यामृशन्तो**
**विस्मृत्येशं निमिषमपि किं वर्तितुं पारयामः ॥ ३८॥**

**காயஸ்தை2ர்யம் கரணபடுதாம் பந்து4ஸம்பத்திமர்த2ம்**
**சாதுர்யம் வா கிமிவ ஹி ப3லம் பி3ப்4ரதோ நிர்ப4ரா: ஸ்ம: ।**
**அந்த்ய: ஶ்வாஸ: கிமயமத2வோ பாந்த்ய இத்யாம்ருஸந்தோ**
**விஸ்ம்ருத்யேஶம் நிமிஷமபி கிம் வர்(த்)திதும் பாரயாம: ॥** (38)

**காயஸ்தை2ர்யம்** = சரீரதிடத்தையும்; **கரணபடுதாம்** = இந்திரியங்களின் சுறுசுறுப்பையும்; **பந்து4ஸம்பத்திம்** = பந்துக்களின் சேர்க்கையையும்; **அர்த2ம்** = பணத்தையும்; **சாதுர்யம் வா** = ஸாமர்த்தியத்தையும்; **ப3லம் கிமிவ ஹி** = இன்னும் என்னென்னவோ பலத்தையும்; **பி3ப்4ருத:** = உடையவர்களாகி; **நிர்ப4ரா: ஸ்ம:** = (நாம்) கவலையற்று மகிழ்ச்சியுடன் வாழ்கிறோம்; **அயம்** = இது; **அந்த்ய: ஶ்வா: கி** = கடைசி மூச்சோ; **அத2வா** = அல்லது; **அபாந்த்ய:** = அதற்கு முந்தியதோ; **இதி ஆம்ருஸந்த:** = என்று யோசித்தால்; **நினிஷமபி** = ஒரு கணமேனும்; **ஈஸம்**

**விஸ்ம்ருத்ய:** = ஈசனை மறந்து; **வர்திதும்** = இருக்க; **கிம் பாரயாம:** = நம்மால் முடியுமா?

நாம் சரீரபலம், ஐம்புலன்களின் வன்மை, பந்துக்களின் கூட்டுறவு, ஐச்வர்ய மிகுதி, புத்தி சாதுரியம் முதலிகளினால் லோகத்தில் பெருமையடைந்து பரிபூர்ணமான வாழ்வில் மகிழ்கின்றோம் ஆனால், மரணம் உண்டென்றும் அது இந்த நிமிஷமோ அல்லது அடுத்த நிமிஷமோ நம்மைக் கொண்டேபோய்விடும் என்றும் சற்று ஆலோசித்துப் பார்த்தோமேயானால் ஒவ்வொரு நிமிஷத்திலும் பரமேஸ்வரனைத் தியானித்து நாம் நற்கதியடைய வேண்டுவோம்.

**अभ्यस्यादौ श्रतिमथ गृह प्राप्य लब्ध्वा महार्था-**
**निष्टा यज्ञैर्जनिततनयः प्रव्रजेदायुषोऽन्ते ।**
**इत्याचष्टे य इह स मनुर्याज्ञवल्क्योऽपि वा मे**
**तावत्कालं प्रतिभवति चेदायुषस्तत्प्रमाणम् ॥ ३९ ॥**

**அப்4யஸ்யாதெ3ள ஸ்ருதிமத2 க்3ருஹம் ப்ராப்ய லப்3த்4வா மஹார்தா2**
**னிஷ்ட்வா யஜ்ஞைர்ஜனிததனய: ப்ரவரஜேதா3யுஷோऽந்தே ।**
**இத்யாசஷ்டே ய இஹ ஸ மனுர்யாஜ்ஞுவல்க்யோऽபி வா மே**
**தாவத்காலம் ப்ரதிப4வதி சேதா3யுஷஸ்தத்ப்ரமாணம் ॥** (39)

**ஆதெ3ள** = முதலில்; **ஸ்ருதிம் அப்4யஸ்ய** = வேதம்பயின்று; **அத2** = பின்பு; **க்3ருஹம் ப்ராப்ய** = வீட்டையடைந்து; **மஹார்தா2ன் லப்3த்4வா** = அதிகப்பணத்தைச் சம்பாதித்து; **ஜனிததனய:** = புத்திரனை உண்டுபண்ணிவிட்டு; **ய்ஜ்ஞ: இஷ்டா** = யாகங்களைச் செய்து; **ஆயுஷோऽந்தே** = ஆயுள் இறுதியில்; **ப்ரவரஜேத்** = ஸந்யாஸம் வாங்கிக்கொள்ள வேண்டும்; **இதி** = என்று; **இஹ** = இங்கு; **ய: மனு: யாஞ்ஞுவல்க்யோ வா** = எந்த மனுவோ யாக்ஞுவல்கியரோ; **ஆசஷ்டே** = சொல்லுகிறாரோ, **ஸ:** = அவர்; **தாவத்காலம்** = அவ்வளவு நீடித்தகாலம்; **மே ஆயுஷ:** = என் ஜீவதசைக்கு; **ப்ரதிப4வதி சேத்** = பொருப்பாளியானால்; தத் = அவர் வாக்கியம்; **ப்ரமாணம்** = அனுஷ்டிக்கத் தக்கது தான்.

மனு யாஜ்ஞுவல்க்யர் முதலிய தரும சாஸ்திரக்காரர்கள், ஆச்ரம விதிகளை விவரிக்குங்கால், பிரம்மசரியத்தில் வேதங்களை அப்யஸித்து, பின்பு கிருஹஸ்தனாகி புத்திரர்களையும் பெற்று, யாகங்களை அனுஷ்டித்துக் கடைசியாக எல்லாவற்றையும் துறக்கவேண்டும் என்று உபதேசிக்கிறார்களே, அவ்வளவு நீண்டகாலம் உயிரோடிருப்பதற்கு இவர்கள் ஜவாப்தாரிகள் ஆவார்களா?

**குறிப்பு:-** ஆயுள் பிரமாணம் நிச்சயம் இல்லை ஆதலால் வெகு சீக்ரமே பந்தங்களைக் களைந்து முக்தி மார்க்கத்தைத் தேடவேண்டியது அவசியம்.

अन्नं धान्यं वसु वसुमतीत्युत्तरेणोत्तरेण
व्याकृष्यन्ते परमकृपणाः पामरा यद्वदित्थम् ।
भूमिः खं द्यौर्द्रुहिणगृहमित्युत्तरेणोत्तरेण
व्यामुह्यन्ते विमलमतयोऽप्यस्थिरेणैव धाम्ना ॥४०॥

**அன்னம் தா$^4$ன்யம் வஸுவஸுமதீத்யுத்தரேணோத்தரேண**
**வ்யாக்ருஷ்யந்தே பரமக்ருபணா: பாமரா யத்$^3$வதி$^3$த்த$^2$ம் |**
**பூ$^4$மி: க$^2$ம் த்$^4$யௌர் த்$^3$ருஹிண க்$^3$ருஹமித்யுத்தரேணோத்தரேண**
**வ்யாமுஹ்யந்தே விமலமதயோ ப்யஸ்தி$^2$ரேணைவ தா$^4$ம்னா || (40)**

**அன்னம்** = ஆஹாரம்; **தா$^4$ன்யம்** = விளைபொருள்; **வஸு** = செல்வம்; **வஸுமதி** = பூமி; **இதி இத்த$^2$ம்** = என்றிப்படி; **உத்தரேண உத்தரேண** = மேல் மேல்; **பரமக்ருமணா: பாமரா:** = மிக வருந்தத் தக்க அற்ப ஜனங்கள்; **யத்$^3$வத்** = எப்படி; **வ்யாக்ருஷ்யந்தே** = இழுக்கப்படுகிறார்களோ; **தத்வத்** = அப்படியே; **பூ$^4$மி:** = பூலோகம்; **க$^2$ம்** = ஆகாயம்; **த்$^3$யௌர்:** = ஸ்வர்க்கம்; **த்$^3$ருஹிணக்$^3$ருஹம்** = பிரும்மலோகம்; **இதி** = என்று; **உத்தரேண உத்தரணே** = மேல் மேல்; **அஸ்தி$^2$ரேணைவ** = நிலையில்லாத; **தா$^4$ம்னா** = பதவியாலேயே; **விமலமதய: அபி** = அறிவாளிகள் கூட; **வ்யாமுஹ்யந்தே** = மோசம் போகிறார்கள்.

பாமர ஜனங்கள் அன்னம், தான்யம், பணம், பூமி என்று மேல் மேல் எப்படிப் பேராசையை வளர்க்கிறார்களோ அப்படியே வித்வான்களான கர்ம மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள் பூமி, அந்தரிகம், ஸ்வர்க்கம், பிரும்ம லோகம் என்று மேல் மேல் ஆசைப்படுகிறார்கள்.

**குறிப்பு:-** ஞான மார்க்கமே உண்மையான மார்க்கம், மற்றவை நிலையற்ற பதவிகளையே தருவன.

प्रायश्चित्तं सकृदुपनते वा प्रमादात्कृते वा
भूयो भूयोऽप्यवहिततरैः साधिते कः समाधिः ।
कारुण्याब्धिर्यदि पुरहरः सत्सु कामं दयेत
भ्रष्टे मादृश्यपि स दयते चेत्क्षतो धर्मसेतुः ॥४१॥

**ப்ராயஶ்சித்தம் ஸக்ருது$^3$பனதே வா ப்ரமாதா$^3$த்க்ருதே வா**
**பூ$^4$யோ பூ$^4$யோsப்யவஹிததரை: ஸாதி$^4$தேக: ஸமார்தி$^4$: |**
**காருண்யாப்$^3$தி$^4$ர்யதி$^3$ புரஹர: ஸத்ஸு காமம் த$^3$யேத**
**ப்$^4$ரஷ்டே மாத்$^3$ருஶ்யபி ஸ த$^3$யதே சேத்க்ஷதோ த$^4$ர்மஸேது: || (41)**

**ஸக்ருது$^3$பனதே வா** = ஒரு தடவை நடந்திருந்தாலும்; **ப்ரமாதா$^3$த்க்ருதே வா** = அஜாக்கிரதையினால் செய்யப்பட்டிருந்தாலும்; **ப்ராயஶ்சித்தம்** = பிராயச்சித்தம்

உண்டு; **அவஹிததரை:** = மிகவும் கவனத்தைச் செலுத்தி; **பூ4யோ பூ4யோऽபி** = திரும்பவும் திரும்பவும்; **ஸாதி4தே** = செய்யப்பட்ட காரியத்தில்; **க: ஸமார்தி4:** = என்ன ஸமாதானம் (சொல்லுகிறது)?; **காருண்யாப்3தி4:** = கருணைக்கடலான; **புரஹர:** = பரமசிவன்; **ஸத்ஸு** = ஸாதுக்கள் விஷயத்தில்; **காமம் யதி3 த3யேத** = தயவு செய்யக்கூடும் என்றாலும்; **ப்4ரேஷ்டே மாத்3ருஶி அபி** = பதிதனான என் போன்றவன் விஷயத்திலும்; **ஸ த3யதே சேத்** = அவர் தயவு செய்வாரானால்; **த4ர்மஸேது:** = தர்மத்தின் எல்லை; **ஷத:** = உடைப்பட்டுப் போகும்.

ஈச்வரனுடைய கருணையைப் பெற ஸாதுக்களே உரியவர்கள்; என் போன்றவர்கள் ஏதோ அறியாமையால் ஒரு தடவை பாபம் செய்பவர்கள் அல்லர்; இடைவிடாமல் வேண்டுமென்றே பாபம் செய்பவர்கள். எங்களுக்குப் பிராயச்சித்தமே கிடையாது. எங்கள் விஷயத்தில் இரங்குவாரே யானால் ஈச்வரனே தருமவரை யறைகளை அவமதித்தவராவர்.

**साध्या शंभोः कथमपि दयेत्यप्यसाध्योपदेशः**
**कोपं तस्य प्रथममपनुधैव साध्यः प्रसादः ।**
**कोपो वर्णाश्रमनियमिताचारनिर्लङ्घनोत्थः**
**शान्तिं नेयः स कथमधुनाऽप्यव्यवस्थाप्रवृत्तैः ॥ ४२ ॥**

**ஸாத்4யா ஶம்போ: கத2மபி த3யேத்யப்யஸாத்4யோ பதே3ஸா:**
**கோபம் தஸ்ய ப்ரத2மமபநுத்4யைவ ஸாத்4ய: ப்ரஸாத3: ।**
**கோபோ வர்ணாஶ்ரமநியமிதாசார நிர்லங்க4னோத்த2:**
**ஶாந்திம் நேய: ஸ கத2மது4னாऽப்யவ்யவஸ்தா2ப்ரவ்ருத்தை: ॥** (42)

**கத2மபி** = எப்படியாவது; **ஶம்போ:** = ஈச்வரனுடைய; **தயா** = தயவு; **ஸாத்4யா** = ஸம்பாதிக்கப்பட வேண்டியது; **இதி** = என்பது; **அஸாத்4யோபதே3ஸா:** = நடைபெறாததை யுபதேசிப்பதாகும்; **தஸ்ய கோபம்** = அவருடைய கோபத்தை; **ப்ரத2மம்** = முதலில்; **அபநுத்4யைவ** = போக்கடித்துத்தானே; **ப்ரஸாத3: ஸாத்4ய:** = அனுக்கிரகத்தைப் பெறவேண்டும்; **வர்ணாஶ்ரமநியமிதாசார நிர்லங்க4னோத்த2:** = வர்ணம் ஆச்ரமம் இவைகளில் ஏற்படுத்தப்பட்ட ஆசாரங்களை மீறினதால் உண்டான; **ஸ: கோப:** = அந்தக் கோபம்; **அது4னாபி** = இப்போதுகூட; **அவ்யவஸ்தா2ப்ரவ்ருத்தை:** = வரையறைகளை மீறி நடந்துவரும் நம்மால்; **கத2ம் ஶாந்திம் நேய:** = எப்படிப் போக்கடிக்கக் கூடியதாகும்?

ஈச்வரனுடைய தயவை அடைய நாங்கள் எவ்விதத்திலும் தகுதி யில்லாதவர்கள்; ஏனெனில் வர்ணம், ஆச்ரமம் என்ற வரையறைகளை லக்ஷ்யம் செய்யாமல் தோன்றியபடி துஷ்டச் செயல்களைச் செய்துகொண்டு அவருக்குக் கோபத்தையுண்டுபண்ணி யிருக்கிறோம். அவர் கோபத்தைப் போக் கடித்த பிறகு அல்லவா, அவருடைய தயவை எதிர் பார்க்கலாம். எங்கள் நடையை இன்னமும் திருத்திக் கொள்ளாத நாங்கள் அவருடைய கோபத்தை எப்படித் தணிய வைக்கப் போகிறோம்?

इष्टापूर्तैनिगमपठनैः कृच्छचान्द्रायणाथैः
स्वामिन्नन्यैरपि तव मनः काममावर्जयेम ।
मध्ये मध्ये यदि न निपतेत् कर्मणा चोदितानां
ज्ञानं श्रद्धेत्युभयमपि नो जातिवैर्यर्गलेव ॥ ४३ ॥

**இஷ்டா பூர்(த்)தைர் நிக³மபடனை: க்ருச்ச²சாந்த்³ராயணாத்⁴யை:
ஸ்வாமின்னன்யைரபி தவ மந: காமமாவர்ஜயேம ।
மத்⁴யே மத்⁴யே யதி³ ந நிபதேத் கர்மணா சோதி³தானாம்
ஜ்ஞானம் ஶ்ரத்³தே⁴த்யுப⁴யமபி நோ ஜாதிவைர்யர்க³லேவ ॥ (43)**

**ஸ்வாமின்னம்** = பிரபுவே; **இஷ்டா பூர்(த்)தைர்:** = யஜ்ஞம் செய்தல் குளம் வெட்டுதல் முதலிய தருமங்கள் மூலமும்; **நிக³மபடனை:** = வேதாத்யயனம் செய்வதாலும்; **க்ருச்ச²சாந்த³ராயணாத்⁴யை:** = கிருச்ரம் சாந்திராயணம் போன்ற விரதங்களை யனுஷ்டிப்பதாலும்; **அத்யைரபி** = மற்ற வழிகளாலும்; **தவ மன:** = உன் மனதை; **காமம் ஆவர்ஜயேம** = ஒருவாறு கவர்ந்துவிடலாம்; (எப்போது என்றால்); **கர்மணாம் சோதி³தானாம் ந:** = பூர்வ வினையாலே தூண்டப்பட்ட நமக்கு; **ஜாதிவைரி ஞானம்** = பிறவிப் பகையான ஞானம்; **ஶ்ரத்³தா⁴** = சிரத்தை; **இதி உப⁴யமபி** = என்ற இவ்விரண்டும்; **அகி³லேவ** = தாழ்ப்பாள் போல; **மத்⁴யே மத்⁴யே** = நடு நடுவே; **யதி³ ந நிபதேத்** = விழுந்து விடாமல் இருக்குமேயானால். [**கர்மணாம் சோதி³தானாம்** = என்ற பாடமும் உண்டு.]

கர்மாக்களைச் செய்து ஈச்வரனை ஆராதிப்போம் என்றால் விவேகம், சிரத்தையென்ற இவ்விரண்டும் கூடியிருந்தால் அல்லவா கர்மாக்களை ஈச்வரன் ஏற்றுக்கொள்வார். நமக்கோ ஜன்மாந்தர துர்வாஸனைகளால் இவ்விரண்டும் நடு நடுவே நழுவி விடுகின்றன. தாழ்ப்பாள் - கட்டை விழுவதால் வழி அடைபட்டுப் போவது போல், அவிவேகம் சிரத்தையின்மை இவையிரண்டும் குறுக்கே வந்து கர்மாக்களை நிஷ்பலமாகச் செய்துவிடுகின்றன. (பழைய காலத்து மணித்தாழ்ப் பாளை இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். அதில் இரண்டு நாக்குகள் உண்டு. அவைகளை விழாமல் திறவுகோலால் தாங்கிக்கொண்டு கட்டையை மெள்ளத் தள்ள வேண்டும்.)

निमयादः परमचपला निःसमाज्ञानराश-
दृक्षोऽन्यः क इति भुवने मार्गणीयं त्वयैव ।
ईदृक्षेऽपि क्वचिदिह दयेयेति कौतूहलं चेत
स्वामिन् विश्वेश्वर तव भवं निस्तरेयं तदाऽहम् ॥ ४४ ॥

**நிர்மர்யாத³: பரமசபலோ நி:ஸமாஜ்ஞானராஶிர் -
மார்த்³ருக்ஷோऽன்ய: க இதி பு⁴வனே மார்க³ணீயம் த்வயைவ ।
ஈத்³ருக்ஷேऽபி க்வசிதி³ஹ த³யேயேதி கௌதூஹலம் சேத்
ஸ்வாமின் விஸ்வேஶ்வர தவ ப⁴வம் நிஸ்தரேயம் ததா³ஹம் ॥ (44)**

**நிர்மர்யாத3:** = வரம்பு கடந்தவனும்; **பரமசபல:** = மிகவும் நிலையற்ற மனதையுடையவனும்; **நிஸ்ஸமாஞானராஶி:** = நிகரற்ற அறிவீனக் குவியலுமாய்; **பு4வனே** = பூலோகத்தில்; **மார்த்3ருக்ஷ:** = என்னைப்போல்; **அத்ய: க:** = வேறு எவன் இருக்கிறான்?; **இதி** = என்று; **த்வயைவ மார்க3ணியம்** = நீரே தேடிப் பார்க்கலாம்; **ஸ்வாமினம் வ்ஶ்வேஶ்வர** = விச்வேச்வரப் பிரபுவே!; இஹ = இந்த லோகத்தில்; **க்வசித்** = எங்கேயாவது; **ஈத்3ருக்ஷேऽபி** = இத்தகையவன் விஷயத்திலே கூட; **த3யேய இதி** = தயவு காட்டுவேன் என்று; **தவ** = உமக்கு; **கௌதுஹலம் சேத்** = உற்சாகம் உண்டாகுமேயானால்; **ததா3** = அப்போது; **அஹம்** = நான்; **ப4வம்** = ஸம்ஸாரத்தை; **நிஸ்தரேயம்** = தாண்டுவேன்.

ஈச்வர கிருபை எனக்கும் உண்டாக வேண்டுமானால், பின் வருமாறு ஏற்படலாம்:- எல்லாவித துர்குணங்களும் சேர்ந்து முற்றிலும் நிராகரிக்கத்தக்க ஜீவன் ஒருவனிடம் நம் தயவைக் காண்பிக்கவேண்டும் என்ற குதூஹலம் ஒரு வேளை பரமேச்வரனுக்கு ஏற்பட்டால் உலகமெங்கும் தேடினாலும் அவருக்கு என்னைத் தவிர வேறு மனிதன் கிடைக்க மாட்டான். அப்போது நான் நற்கதி யடைவேன்.

**पश्चात्तप्ताः कथमपि विधेः किंकरीभूय कुर्मः**
**सेवां शम्भोरिति च नियमं वापि संकल्पयामः ।**
**आयुः किं मे किमिव करणं दुस्तरे संकटेऽस्मिन्**
**स्वामिन् गौरीरमण शरणं नस्त्वमेव त्वमेव ॥४५॥**

**பஶ்சாத்தப்தா: கத2மபி விதே4: கிங்கரீபூ4ய குர்ம:**
**ஸேவாம் ஶம்போ4ரிதி ச நியமம் வாऽபி ஸங்கல்பயாம: |**
**ஆயு: கிம் மே கிமிவ கரணம் து3ஸ்தரே ஸங்கடே2ऽஸ்மின்**
**ஸ்வாமின் கௌ3ரீரமண ஶரணம் நஸ்த்வமேவ த்வமேவ || (45)**

**பஶ்சாத்தப்தா:** = பச்சாதாபம் அடைந்தவர்களாய்; **விதே4: கிங்கரீபூ4ய** = சாஸ்திர விதிகளுக்குக் கட்டுப்பட்டு; **கத2மபி** = எப்படியாவது; **ஸேவாம் குர்ம:** = ஈச்வரனின்; = உபாஸனையைச் செய்வோம்; **இதி ச** = என்றுகூட; ; **நியமம் வாऽபி** ஒரு நிபந்தனையை வேண்டுமானாலும்; **ஸங்கல்பயாம:** = மனதில் ஏற்றுகொள்வோம்.; **மே ஆயு: கிம்** = (ஆனால்) என் ஆயுள் எவ்வளவு?; **கரணம் கிமிவ** = ஸாதனந்தான் எது?; **அஸ்மின் து3ஸ்தரே ஸங்கடே2** = இந்த வெல்ல முடியாத இடைஞ்சலில்; **ஸ்வாமின் கௌ3ரீரமண** = ஏ பிரபோ, பார்வதீபதே!; ந: = எமக்கு; **த்வமேவ த்மேவ** = நீர்தான் நீர்தான்; **ஶரணம்** = கதி.

ஆகமங்களில் சொல்லியபடி, உன் ஸேவையைச் செய்ய வேண்டுமென்ற ஸங்கல்பமானது பச்சாக்காபத்தினால் நல்ல புத்தியுண்டாகி ஒருகால் எனக்கு ஏற்பட்டாலும், என் ஸங்கல்பத்தை நிறைவேற்ற எனக்கு ஆயுஷ் காலமும் மற்ற ஸாதனங்களும் எங்கு கிடைக்கப்போகின்றன? ஆகையால், ஏ பார்வதீபதியே, நீயே சரணம் சரணம்.

**सम्यङ्मुक्तास्त्रिभिरपि मलैश्चिद्विकासैकरूपा-**
**स्त्वन्निध्यानप्रवणमनसः सूरयस्त्वत्पुरे ये ।**
**तेषां सन्दर्शयितुमपरिज्ञातपूर्वं कदाचि-**
**जन्तुं मुग्धं शिव नयसि किं विश्वपारं पुरं माम् ॥ ४६॥**

**ஸம்யங்முக்தாஸ்த்ரிபி4ரபி மலைஶ்சித்3விகாஸைகரூபாஸ் -**
**த்வன்னித்3யானப்ரவணமநஸ: ஸூரயஸ்த்வத்புரே யே ।**
**தேஷாம் ஸந்த3ர்ஶயிதுமபரிஜ்ஞாதபூர்வம் கதா3சித்**
**ஜந்தும் முக்3த4ம் ஶிவ நயஸி கிம் விஶ்வபாரம் புரம் மாம் ॥ (46)**

**ஶிவ** = ஹே சிவ!; **த்ரிபி4ரபி மலை:** = மும்மலங்களினால்; **ஸம்யங்முக்தா:** = முற்றிலும் விடுபட்டவர்களும்; **சித்3விகாஸைகரூபாஸ்:** = ஞானப்ரகாச ஸ்வரூபமாகவே யிருப்பவர்களும்; **த்வன்னித்3யானப்ரவணமநஸ:** = உன்னை தியானிப்பதில் செலுத்திய மனதோடு கூடியவர்களும் ஆக; **த்வத்புரே** = உன் பட்டணத்தில்; **யே ஸூரய:** = எந்தப் பெரியோர்கள் இருக்கிறார்களோ; **தேஷாம்** = அவர்களுக்கு; **அபரிஜ்ஞாதபூர்வம்** = முன் தெரியாத; **முக்3த4ம் ஜந்தும்** = மூடனான ஒரு ஜீவனை; **ஸந்த3ர்ஶயிதும்** = காண்பிக்க; **மாம்** = என்னை; **விஶ்வபாரம் புரம்** = இவ்வுலகிற் கப்பாலுள்ள உன் பட்டணத்திற்கு; **கதா3சித்** = ஒரு வேளை; **கிம் நயஸி** = அழைத்துப் போவாயா?

முக்தி க்ஷேத்திரமாகிய உன் நகரத்தில் வஶிக்கும் ஞான ரூபிகளான உன் பக்தர்களுக்கு என்றும் கண்டறியாத பரம மூடமான ஒரு ஜந்துவை வேடிக்கைக்காக நீ கொண்டுபோய்க் காண்பிக்க நினைத்து என்னை யழைத்துப் போவாயானால், எனக்கு உன் ஸ்தானத்தை யடையும் அதிர்ஷ்டம் ஏற்படலாம். வேறு வழியில் கிடையாது.

**குறிப்பு:-** ஆணவம், மாயிகம், கார்மிகம் இவை மும்மலங்கள்; வாசிகம், காயிகம், மானஸம் எனச் சிலர் கூறுகின்றனர்.

**दिष्टया लब्धं द्विजवरकुले जन्म तत्रापि दिष्टया**
**धर्माधर्मस्थितिखगतैव प्रसादाद्गुरूणाम् ।**
**जन्मन्यस्मिन्नपि यदि न मे संभवेदास्तिकत्वं**
**निस्तारः किं निरयभवनात् सर्वमोक्षेऽपि लभ्यः॥४७॥**

**தி3ஷ்ட்யா லப்3த4ம் த்3விஜவரகுலே ஜன்ம தத்ராபி தி3ஷ்ட்யா**
**த4ர்மாத4ர்மஸ்தி2திரவ க3தைவ ப்ரஸாதாகு3ருணாம் ।**
**ஜன்மன்யஸ்மின்னபி யதி3 ந மே ஸம்ப4வேதா3ஸ்திகத்வம்**
**நிஸ்தார: கிம் நிரயப4வனாத் ஸர்வமோக்ஷேऽபி லப்4ய: ॥ (47)**

**த்3விஜவரகுலே** = பிராம்மண சிரேஷ்டர்கள் குலத்தில்; **தி3ஷ்ட்யா** = தெய்வாதீனமாக; **ஜன்ம** = பிறப்பு; **லப்3த4ம்** = கிடைத்தது; **தத்ராபி** = அதிலும்; **தி3ஷ்ட்யா** = அதிர்ஷ்ட வசத்தால்; **கு3ருணாம்** = குருக்களின்; **ப்ரஸாதாத்** = அனுக்கிரஹத்தால்; **த4ர்மாத4ர்மஸ்தி2தி:** = தர்மம் அதர்மம் இவைகளின் வரன்முறை; **அவக3தா ஏவ** = அறியப்பட்டது; **அஸ்மின் ஜன்மனி அபி** = இந்த ஜன்மத்திலே கூட; **மே** = எனக்கு; **அஸ்திகத்வம்** = பரலோக நம்பிக்கை; **யதி3 ந ஸம்ப4வேத்** = உண்டாகவில்லையானால்; **நிரயப4வனாத்** = நரகத்திலிருந்து; **நிஸ்தார:** = கரையேறல்; **ஸர்வமோக்ஷேऽபி** = எல்லா ஜீவர்களுக்கும் மோக்ஷம் கிடைக்கும் காலத்திலேகூடக்; **கிம் லப்4ய:** = கிடைக்குமா?

பிராம்மண சிரேஷ்டர்களின் வம்சத்தில் அதிர்ஷ்ட வசத்தால் பிறந்து தெய்வானுகூல்யத்தாலும் குருக்களின் அனுக்கிரஹத்தாலும் தர்மம் எது அதர்மம் எது என்ற விவேகமும் ஏற்பட்டிருக்கிற இந்த ஜன்மத்திலே கூட பரலோக சிரத்தை எனக்கு உண்டாகவில்லை யென்றால், ஸர்வமோக்ஷம் என்று சொல்லக்கூடிய காலத்திற் கூட எனக்கு மோக்ஷம் கிடைக்க நியாயமில்லை.

**भव्ये देहे पटुषु करणेष्वालये श्रीसमृद्धे**
**कौमारान्ते वयसि कथमप्यप्रवृत्ते च दुःखे ।**
**प्रत्यक्पुष्पीप्रसवविधया यस्य पुंसो निसर्गात्**
**प्रत्यग्वक्त्रं भवति हृदयं कस्ततोऽप्यस्ति धन्यः॥४८॥**

**ப4வ்யே தே3ஹே படுஷுகரணேஷ்வாலயே ஶ்ரீஸ்ம்ருத்3வே**
**கௌமாராந்தே வயஸி கத2மப்யப்ரவ்ருத்தே ச து3:கே2 ।**
**ப்ரத்யக்புஷ்பீப்ரஸவித4யா யஸ்ய பும்ஸோ நிஸர்கா3த்**
**ப்ரத்யக்3 வக்த்ரம் ப4வதி ஹ்ருத3யம் கஸ்ததோऽப்யஸ்தி த4ன்ய: ॥ 48**

**ப4வ்யே தே3ஹே** = சரீரம் திடமாயிருக்க; **கரணேஷு படுஷு** = இந்திரியங்கள் சுறுசுறுப்பாயிருக்க; **ஆலயே ஶ்ரீஸ்ம்ருத்3வே** = இருப்பிடத்தில் லக்ஷ்மீ விலாஸமிருக்க; **கௌமாராந்தே வயஸி** = பால்யம் கடந்த (யௌவன) வயதில்; **கத2மபி** = கார் எவ்விதத்திலும்; **து3: கே2 ச அப்ரவ்ருத்தே** = கஷ்டம் வராமலிருக்கும்போதே; **யஸ்ய பும்ஸ:** = எவனுக்கு; **ப்ரத்யக்புஷ்பீப்ரஸவித4யா** = தலைகீழாய்ப் பூக்கிற நாயுருவியின் பூக்காம்பு மாதிரியாய்; **நிஸர்கா3த்** = தானாகவே; **ஹ்ருத3யம்** = மனது; **ப்ரத்யக்3 வக்த்ரம்** = உள் நோக்க முடையதாக; **ப4வதி** = ஆகிறதோ; **ததோऽபி** = அவனைக் காட்டிலும்; **த4ன்ய:** = பாக்கியசாலி; **க: அஸ்தி** = எவன் இருக்கிறான்?

புண்ணியாத்மாக்களான சிலர்க்கே சரீர திடமும் மற்றுமுள்ள வாழ்க்கை ஸௌகரியங்களும் நிரம்பியிருக்கும் போதே, யௌவனப் பருவத்திலேயே நாயுருவிப் பூக்களைப் போல் உள்நோக்கமுடையதான வைராக்யம் ஏற்பட்டு விடுகிறது. அத்தகையோரே பாக்கியசாலிகள்.

**नाहं याचे पदमुडुपतेर्नाधिकारं मघोनो**
**नापि ब्राह्मीं भुवनगुरुतां का कथाऽन्यप्रपञ्चे।**
**अन्यस्यान्यः श्रियमभिलपनस्तु कस्तस्य लोको**
**मां शंभो दिश मसृणितं मामकानन्दमेव ॥४९॥**

**நாஹம் யாசே பத³முடு³பதேர் நாதி⁴காரம் மதோ⁴னோ**
**நாபி ப்⁴ராஹ்மீம் பு⁴வனகு³ருதாம் காகதா²ऽன்யப்ரபஞ்சே ।**
**அந்யஸ்யான்ய: ஶ்ரியமபி⁴ல ஷன்னஸ்து கஸ்தஸ்ய லோகோ**
**மஹ்யம் ஶம்போ⁴ தி³ஶ மஸ்ருணிதம் மாமகானந்த³மேவ ॥** (49)

**அஹம்** = நான்; **உடுபதே: பத³ம் ந யாசே** = சந்திரனுடைய லோகத்தை விரும்பவில்லை; **மதோ⁴ன: அதி⁴காரம் ந** = இந்திரனுடைய அதிகாரம் வேண்டுமென்று கேட்கவில்லை; **ப்⁴ராஹ்மீம் பு⁴வனகு³ருதாம் நாபி** = பிரும்மாவினுடைய லோகபூஜ்யராயிருக்கும் பெருமையையும் கோரவில்லை; **அன்யப்ரபஞ்சே கா கதா²** = வேறு உலகங்களின் விஷயத்தில் சொல்ல வேண்டுவதென்ன?; **அந்யஸ்ய ஶ்ரியம்** = மற்றவனுடைய ஸம்பத்தை; **அந்ய: அபி⁴லஷன்** = வேறொருவன் ஆசைப்பட்டால்; **தஸ்ய க: லோக: அஸ்து** = அவனுக்கு எந்த உலகம் கிடைக்கும்?; **ஶம்போ⁴** = ஈச்வரா!; **மஹ்யம்** = எனக்கு; **மஸ்ருணிதம்** = அதிக ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய; **மாமகானந்த³ம் ஏவ** = எனக்குச் சொந்தமான ஆனந்தநிலையையே; **தி³ஶ** = கொடுப்பீராக.

இந்திரன் சந்திரன் பிரம்மா முதலியவர்களின் பதவிகளுக்கே நான் ஆசைப்படவில்லை. மற்ற அற்ப பதவிகளை எங்கு விரும்பப்போகிறேன்? பிறர் பதவியை விரும்புகிறவன் நல்ல கதியை அடைவானா? நான் கேட்பது என்னுடைய தான பதவியையே; சம்போ! அதைக் கொடுத்தருளும்.

இதனால் ஆத்மானந்தத்தைக் கேட்கிறார்.

**आगर्भादाकुलपरिबृडादा चतुर्वक्त्रतोऽपि**
**त्वत्पादाब्जप्रपदनपरान् वेत्सि नश्चन्द्रमौले ।**
**मायायाश्च प्रपदनपरेष्वप्रवृत्तिं त्वमात्थ**
**स्वामिन्नेवं सति यदुचितं तत्र देवः प्रमाणम् ॥ ५० ॥**

**ஆக³ர்பா⁴தா³குலபரி ப்³ருட³தா³ சதுர்வக்த்ரதோऽபி**
**த்வத்பாதா³ப்³ஜப்ரபத³னபரான் வேத்ஸி நஶ்சந்த்³ரமௌளே ।**
**மாயாயாஶ்ச ப்ரபத³ன பரேஷ்வ ப்ரவ்ருத்திம் த்வமாத்த**
**ஸ்வாமின்னேவம் ஸதிய து³சிதம் தத்ர தே³வ: ப்ரமாணம் ॥** (50)

**சந்த்³ரமௌளே** = சந்திரசேகரரே!; **ஆக³ர்பா⁴த்** = நான் உண்டானது முதல்; **ஆகுலபரி ப்³ருடாத்** = என் குல கூடஸ்தர் முதற்கொண்டு; **ஆசதுர்வக்த்ரத: அபி** =

பிரும்மா முதற்கொண்டு எங்கள் வம்சத்தைக் கணக்கிட்டுப் பார்த்தாலும்; **ந:** = எங்களை; **த்வத்பாதா³ப்³ஜப்ரபத³னபரான்** = உம் பாதகமலங்களே கதியென்று அடைக்கலம் புகும் விரதமுடையவர்களாக; **வேத்ஸி** = நீர் அறிவீர்; **ப்ரபத³ன பரேஷு ச** = உன்னைச் சரணம் அடைபவர்கள் விஷயத்தில்; **மாயாயா:** = மாயையின்; **அப்ரவ்ருத்தி** = பரவுதலின்மையை; **த்வம் ஆத்த²** = நீர் சொல்லியிருக்கிறீர்; **ஸ்வாமின்** = பிரபுவே!; **ஏவ ஸதி** = இவ்விதமிருக்க; **யத் உசிதம்** = எது நியாயமோ; **தத்ர** = அதுவிஷயத்தில்; **தே³வ: ப்ரமாணம்** = தங்களிஷ்டமே திட்டம்.

பரம மாஹேச்வரர்களுடைய வம்சத்தில் பிறந்த என்னை நீர் ரக்ஷிக்கத்தான் வேண்டும்; பிரும்மா முதல் எங்கள் பரம்பரையில் கர்ப்பத்திலிருக்கும் குழந்தைவரை நாங்கள் எல்லோரும் உம்மையே சரணமடைந்தவர்கள் என்பது உமக்குத்தெரியும்; உம்மைச் சரணமடைந்தவர்களுக்கு மாயையென்ற திரை இடையூறாகாது என்று நீர் வாக்குக் கொடுத்திருக்கிறீர். இருக்கிற விஷயங்களை உள்ளபடி உம்மிடம் தெரிவித்துவிட்டேன். இனி உம் இஷ்டம்; உசிதம்போல் நடத்தும்.

**दण्डं धत्ते सकलजगतां दक्षिणो यः कृतान्तो**
**नामाप्यस्य प्रतिभयतनोर्नोपगृह्णीमहीति ।**
**प्राप्ताः स्मस्तं निगमवचसामुत्तरो यः कृतान्तो**
**यद्वा तद्वा भवतु न पुनस्तस्य पश्येम वक्त्रम् ॥५१॥**

**தண்ட³ம் த⁴த்தே ஸகலஜக³தாம் த³க்ஷிணோ ய: க்ருதாந்தோ**
**நாமாப்யஸ்ய ப்ரதிப⁴யத நோர்நோப க்³ருஹ்ணீ மஹீதி ।**
**ப்ராப்தா: ஸ்மஸ்தம் நிக³மவசஸா முத்தரோய: க்ருதாந்தோ**
**யத்³வா தத்³வா ப⁴வது ந புநஸ்தஸ்ய பஶ்யேம வக்த்ரம் ॥** **(51)**

**த³க்ஷிணா:** = தெற்கேயுள்ள; **ய: க்ருதாந்த:** = எந்த யமன்; **ஸகலஜக³தாம்** = எல்லாபிராணிகளுக்கும்; **தண்ட³ம் த⁴த்தே** = தண்டம் விதிப்பவனோ; **ப்ரதிப⁴யதணோ:** = பயங்கர ரூபமுடைய; **அஸ்ய** = இவனுடைய; **நாமாபி** = பெயரைக்கூட; **நோபக்³ருஹ்ணீமஹி** = நாங்கள் ஸ்மரிக்க மாட்டோம்; **இதி** = என்று; **ய:** = எவர்; **நிக³மவசஸாம்** = வேதவாக்கியங்களுக்கு; **உத்தர:** = எட்டாத (அப்பாலுள்ள); **க்ருதாந்த:** = கிருதாந்தரோ (முடி வானபொருளோ); **தம் ப்ராப்தா: ஸ்ம:** = அவரைச் சரணம் அடைந்திருக்கின்றோம்; **யத்³வா தத்³வா ப⁴வது** = எது வந்தாலும் வரட்டும்; **தஸ்ய வக்த்ரம்** = அவனுடைய (யமனுடைய) முகத்தை; **புந: ந பஶ்யேம** = மறுபடி பார்க்காமலிருப்போமாக.

தெற்கே வசிக்கும் யமன் முகத்தில் விழிக்கக் கூடாது என்று (வடக்கே அவனுக்கும் யமனாக இருக்கும்) வேதங்களுக்கெட்டாத ஸர்க்கஸ்திதிப்ரளயப் பிரபுவான உம்மைச் சரணமடைந்தோம். இனி என்ன ஆனாலும், யமனுடைய முகதரிசனம் எமக்குக் கிடையாது என்பது மட்டும் நிச்சயம்.

# ஸ்ரீ சாந்தி விலாஸ:

(மோக்ஷம் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் சிவதூதர் முகம் பார்ப்பேனே ஒழிய, யமதூதர்கள் என்னிடம் அணுகமாட்டார்கள்.)

**ஸ்ரீ ஶாந்தி விலாஸம் முற்றிற்று.**

---

# விஞ்ஞாபனம்

ஆஸ்திகர்கள் அனைவரும் வைதிக மார்க்கத்திலே பற்றுடையவர்களாயும் பகவானிடத்து பக்தி மிகுந்தவர்களாயும் சிரத்தையுடையவர்களாயும் செய்வதற்கு அனுகுணமாக நமது ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளால் **ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்** என்ற ஸ்தாபனம் ஒன்று இவ்வாண்டிலே தொடங்கப் பெற்றுள்ளது யாவரும் அறிந்ததே.

ஸ்ரீ ஆசார்யர்கள் சில ஆண்டுகளாக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்தை எல்லோரும் பிரதிதினம் செய்து வரவேண்டுமென்று ஆக்ஞைசெய்து வருகிறார்கள். அதன்படி பாராயணஞ் செய்து, ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை மனப்பாடமாக்கிக் கொண்டவர்கள் **"மேலே என்ன செய்வது?"** என்று ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞையிட வேண்டும் என்றபோது, ஸ்ரீ ஆசார்யர்கள் உபதேசித்ததாவது:

"ஸஹஸ்ரநாம பாராயணத்தால் உங்களுக்கு வாக் சுத்தியும் ஈச்வர கிருபையும் ஏற்பட்டிருக்கின்றன. இவற்றோடு சிறிது வேத பாஷா ஞானமும் ஏற்பட்டால் மேற்கொண்டு புண்ய நூல்களைப் பார்த்து நற்கதியடைய ஸௌகர்யமாக இருக்கும், அதற்குப் பண்டிதர்கள் அகப்படாத இடங்களில், தமிழிலே பதவுரை பொழிப்புரைகள் எழுதப்பெற்றதாய்க் கோசஸ்தானத்தில் வெளியிடப்பட்டிருக்கும் பஜ கோவிந்தம் என்னும் நூலைத் தாமாகவே அர்த்தத்துடன் பாடமாக வாசித்து நெட்டுருச் செய்யவேண்டும், 'பஜ கோவிந்தம்' முடிந்த பிறகு, கோசஸ்தானத்தில் வெளியிடப்பட்டிருக்கும் **ஸதாசிவ ப்ரம்மேந்திராள் ஸ்தோத்திர புஸ்தகத்தை** அவ்விதமே பாடம் செய்ய வேண்டும், அதனை அடுத்து, **லோஷ்டதேவருடைய தீனாக்ரந்தனம்** என்னும் புஸ்தகத்தை அவ்விதமே பாடம் செய்ய வேண்டும், அதற்குப் பிறகு, ஆதி **ஆசார்ய ஸ்வாமிகளுடைய விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரத்தைப்** பாடம் செய்யவேண்டும். அதற்கும் பிறகு அநேகமாய்ப் பாதி வ்யுத்பத்தி ஏற்பட்டுவிடுமாதலால், ஸஹஸ்ரநாம பாஷ்யத்தைப் படித்து அதன் பொருளை அறிந்து கொள்ள வேண்டும்."

- **காமகோடி**, 19-10-'43.

இதற்குமேல் கோசஸ்தானத்திலிருந்து வெளியிடும் புதிய புத்தகங்களையும் அப்போதைக்கப்போது தருவித்து அர்த்தத்துடன் பாடம் செய்து, நலம் அடைய வேண்டியதைப்பற்றி அதிகம் எழுதவும் வேண்டுமா?

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.**

# ஸ்ரீ சாந்தி விலாஸ:

ஸ்ரீ குருப்யோ நம:

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் பாஷ்யத்திற்கு
வே. நாராயணன் எழுதிய தமிழ் அனுவாதத்துடன் கூடியது.
திருந்திய இரண்டாம் பதிப்பு விலை ரூ.1-4-0 தபாற் செலவு 0-4-0

உலகம் எங்கும் சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது; இப்போது பொது ஜனங்கள் செய்யவேண்டியது என்ன? அவர்கள் நன்மை பெறுவது எப்படி? லோக க்ஷேமத்தை நாடி அவர்கள் என்ன செய்யலாம்?

இந்தக் கேள்விகளுக்கு விடையாக அமைந்தது **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்.** பக்தியோடு இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணஞ் செய்தால் இவ்வுலகிலே சுகமாக வாழலாம்; மேலுலகிலும் சுகத்தைப் பெறலாம்; பயம் நீங்கிவிடும்; வந்த ஆபத்து விலகிப்போம்; நோய் பீடிக்காது; எல்லா இடையூறுகளையும் சுலபமாகக் கடந்து விடலாம்; சுகம் உண்டு, செல்வம் உண்டு, புகழ் உண்டு, கோபம், லோபம், மோஹம் முதலிய துர்க்குணங்கள் நம்மைவிட்டு நீங்கிவிடும். பொறுமை, தைர்யம், வீர்பம், தேஜஸ் முதலிய குணங்கள் நம்மிடம் விளங்கும். 'இது வெறும் வார்த்தையன்று, உண்மையே' என்று ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் உறுதி கூறுகிறார்கள்.

பாராயணத்திலே சிரத்தை வேண்டும். அதற்கு அனுகூலமாக, ஸஹஸ்ர நாமங்களுக்கும் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் பாஷ்யஞ் செய்திருக்கிறார்கள். விஷ்ணுவின் நாமாக்களை ஸங்கீர்த்தனஞ் செய்வதால் பரிபூர்ண ஞானம் உண்டாகும் என்றும் புராண புருஷனை ஸ்துதிப்பவர்கள் உண்மை ஞானிகளாகிறார்கள் என்றும் கூறுகிறார்கள்.

கண்ணைக் கவரும் அழகிய மூன்றுவர்ணப் படங்களும் 248 பக்கங்களும் கொண்ட இந்தப் புஸ்தகத்திற்கு மிகவும் குறைந்த விலை ரூ. 1-4-0

கிடைக்குமிடம்:

## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்,

57, மேல டபீர் தெரு, கும்பகோணம்.

The Liberty Press. Madras.